உ

॥ ॐ श्री गणाधिपतये नमः ॥



॥ श्री महागणपति नवार्ण वेदपादस्तवः ॥

# ஸ்ரீ மஹாகணபதி நவார்ண வேதபாதஸ்தவம்


தமிழ் உரை :

வேதாந்தப் பேராசிரியர், ஆத்மவித்யா பூஷணம்

பிரம்மஸ்ரீ V.S.V. குருஸ்வாமி சாஸ்திரிகள்

திருவனந்தபுரம்


श्रीकण्ठतनय श्रीश श्रीकर श्रीदलार्चित ।
श्री विनायक सर्वेश श्रियं वासय मे कुले ॥ (१)

ஸ்ரீகண்ட தநய ஸ்ரீச ஸ்ரீகர ஸ்ரீதளார்ச்சித ।
ஸ்ரீ விநாயக ஸர்வேச ச்ரியம் வாஸய மே குலே ॥

1. திருநீலகண்டரின் புதல்வரே! லக்ஷ்மீ நாதனே! செல்வத்தை அளிப்பவரே! வில்வ இதழ்

களால் பூஜிக்கப்பட்டவரே! எல்லோருக்கும் தலைவரே! விநாயகக்கடவுளே! என்னுடைய வம்சத்தில் மஹாலக்ஷ்மியை வாஸம் செய்யும்படியாகச் செய்வீராக. [இச்செய்யுளில் "श्रियं वासय मे कुले" என்ற வேத வாக்யம் நான்காவது பாதமாக அமைந்திருக்கிறது.]

गजानन गणाधीश द्विजराज विभूषित ।
भजे त्वां सच्चिदानन्द ब्रह्मणां ब्रह्मणस्पते ॥ २ ॥

கஜானன கணாதீச த்விஜராஜ விபூஷித।
பஜே த்வாம் ஸச்சிதாநந்த ப்ரஹ்மணாம் ப்ரஹ்மணஸ்பதே ॥

2. யானைமுகத்தோனே! கணதேவதைகளைத் திற்கும் தலைவனே! சந்திரனால் அலங்கரிக்கப்பட்ட சிரஸ்ஸை உடையவனே! ஸச்சிதானந்த வடிவனே! படைப்புக் கடவுளருக்குத் தலைவனே! வேதங்களின் தலைவனே! தங்களையே ஸேவிக்கின்றேன். [ब्रह्मणां ब्रह्मणस्पते என்ற வேதவாக்யம் இச்செய்யுளில் அடங்கியுள்ளது.]

णषष्टवाच्यनाशाय रोगाटविकुठारिणे ।
घृणापालितलोकाय वनानां पतये नमः ॥ ३ ॥

ணஷஷ்ட வாச்ய நாசாய ரோகாடவி குடாரிணே।
க்ருணா பாலித லோகாய வனானாம் பதயே நம: ॥

3. (ण) ண என்ற எழுத்திலிருந்து ஆறுவது எழுத்தான (न) ந என்ற எழுத்தின் பொருளான இல்லாமையை (ஏழ்மையை) ஒழிப்பவரும், பிணிகளாகிற காட்டிற்குக் கோடாரியாயிருப்பவரும்,

தயையால் உலகத்தைக் காப்பாற்றுகிறவரும், காடுகளுக்கெல்லாம் தலைவனாகவுமிருக்கின்ற கண பதிக்கு நமஸ்காரம். [இச்செய்யுளில் "वनानां पतये नमः" என்ற வேத வாக்யம் அடங்கியுள்ளது.]

धियं प्रयच्छते तुभ्यमीप्सितार्थप्रदायिने ।
दीप्तभूषणभूषाय दिशां च पतये नमः ॥ ४ ॥

தியம் ப்ரயச்சதே துப்யமீப்ஸிதார்தப்ரதாயினே ।
தீப்த பூஷணபூஷாய திசாம் ச பதயே நம: ॥

4. ஹே கணேச! நல்லறிவைக் கொடுப்பவரும், விரும்பிய பொருள்களை அளிப்பவரும், நன்கு துலங்குகின்ற அணிகளால் அலங்கரிக்கப்பட்ட வரும் திசைகளின் தலைவருமான தங்களுக்கு நமஸ்காரம். [இச் செய்யுளில் " दिशां च पतये नमः " என்ற வேதவாக்யம் சேர்ந்திருக்கிறது]

पञ्चब्रह्मस्वरूपाय पञ्चपातकहारिणे ।
पञ्चतत्वात्मने तुभ्यं पशूनां पतये नमः ॥ ५ ॥

பஞ்ச ப்ரஹ்மஸ்வரூபாய பஞ்ச பாதகஹாரிணே ।
பஞ்ச தத்வாத்மனே துப்யம் பசூனும் பதயே நம: ॥

5. ஸத்யோஜாதன், வாமதேவன், அகோரன், தத்புருஷன், ஈசானன் என்ற ஐந்து ப்ரஹ்மங்களாக இருப்பவரும், அந்தணனைக் கொலை செய்தல், கள் குடித்தல், தர்மத்திற்கென்று சேகரித்த பொருளை களவாடுதல், குருவின் மனைவியைப் புணருதல், இவைகளை செய்பவர்களுடன் சேருதல், ஆகிய ஐந்து மஹாபாதகங்களையும் அழிப்பவரும், வானம், வாயு, தீ, நீர், மண், ஆகிய ஐந்து பூதங்களின்

வடிவமாயிருப்பவரும், பசுக்களின் தலைவருமான தங்களுக்கு வந்தனம். [இங்கு "पशूनां पतये नमः" என்ற வேத வாக்யம் சேர்ந்திருக்கிறது]

तटित्कोटिप्रतीकाशतनवे विश्वसाक्षिणे ।
तपस्विध्यायिने तुभ्यं सेनानिभ्यश्च वो नमः ॥ ६ ॥

தடித்கோடி ப்ரதீகாச தனவே விச்வ ஸாக்ஷிணே ।
தபஸ்வித்யாயினே துப்யம் ஸேநாநிப்யஸ்ச்ச வோ நம: ॥

6. கோடி மின்னலுக்கொப்பான ஒளிமிகுந்த உடலையுடையவரும், இவ்வுலகிற்கு ஸாக்ஷியாயிருப்பவரும், பொது ஜனங்களை மறக்காமல் எப்பொழுதும் மனத்தில் கொண்டிருப்பவரும், இவ்வுலகிலுள்ள படைகளுக்கெல்லாம் தலைவராக இருப்பவருமான தங்களுக்கு நமஸ்காரம். [இச்செய்யுளில் "सेनानिभ्यश्च वो नमः" என்ற வேதவாக்யமடங்கியிருக்கிறது.]

ये भजन्त्यक्षरं त्वां ते प्राप्नुवन्त्यक्षरात्मताम् ।
नैकरूपाय महते मुष्णतां पतये नमः ॥ ७ ॥

யே பஜந்த்யக்ஷரம் த்வாம் தே ப்ராப்னுவந்த்யக்ஷராத்மதாம் ।
நைகரூபாய மஹதே முஷ்ணதாம் பதயே நம: ॥

7. எப்பொழுதும் அழியாமலிருக்கும் தங்களை வழிபடுகின்றவர்கள் தங்களுடன் இரண்டறக் கலந்துவிடுகின்றனர். அத்தகைய சிறப்பு வாய்ந்தவரும், பலவிதமான ரூபங்களையடைந்தவரும், மிகப் பெருமை வாய்ந்தவரும், திருடர்களுக்கும் தலைவராக இருப்பவருமான தங்களுக்கு நமஸ்காரம். [இச்

செய்யுளில் " मुष्णतां पतये नामः " என்ற வேத வாக்ய மடங்கியுள்ளது.]

नगजावरपुत्राय सुरराजार्चिताय च ।
सगुणाय नमस्तुभ्यं सुमृडीकाय मीढुषे ॥ ८ ॥

நகஜாவர புத்ராய ஸுரராஜார்சிதாய ச ।
ஸகுணய நமஸ்துப்யம் ஸும்ருடீகாய மீடுஷே ॥

8. பார்வதி தேவியின் சிறந்த புதல்வரும், தேவேந்திரனால் பூஜிக்கப்பட்டவரும், நற்குணம் பொருந்தியவரும், எல்லோருக்கும் எப்பொழுதும் இன்பங்களையளிப்பவருமான தங்களுக்கு நமஸ்காரம். [இங்கு " सुमृडीकाय मीढुषे " என்ற வேதவசன மடங்கியுள்ளது ]

महापातकसङ्घात महारणभयापह ।
त्वदीय कृपया देव सर्वानव यजामहे ॥ ९ ॥

மஹாபாதக ஸங்காத மஹாரணபயாபஹ ।
த்வதீயக்ருபயா தேவ ஸர்வாநவ யஜாமஹே ॥

9. பெரிய பாவக் கூட்டத்திலிருந்தும், பெரிய போரிலிருந்தும் ஏற்படும் அச்சத்தையகற்றுபவரே! ஹே தேவா! தங்களுடைய தயையாலேயே எல்லோரையும் காப்பாற்றுவீராக. நாங்கள் தங்களை வழிபடுகின்றோம். [இந்த பத்யத்தில் " सर्वानवयजामहे " என்ற வேதவசனமுள்ளது.

नवार्णरत्न निगमपादसम्पुटितां स्तुतिम् ।
भक्त्या पठन्ति ये तेषां तुष्टो भव गणाधिप ॥ १० ॥

நவார்ணரத்ந நிகமபாதஸம்புடிதாம் ஸ்துதிம் ।
பக்த்யா படந்தி யே தேஷாம் துஷ்டோபவ கணாதிப ॥

10. "ஸ்ரீ கணாதிபதயே நம:" என்ற மந்திரத்திலடங்கிய எழுத்துக்களை ஆரம்பத்திலும் வேதவாக்யங்களை செய்யுளின் முடிவிலும் கொண்டதான தங்களுடைய துதியை பக்தியுடன் படிப்பவர்களுக்கு ஹே ஸ்ரீ கணபதே ! ஸந்தோஷமடைந்தவராய் அவர்கள் அபீஷ்டத்தைத் தந்தருளுவீராக.

**பதிப்பாசிரியர் குறிப்பு:**

ஒவ்வொரு ச்லோகத்திலும் கடைசி பாதம் வேத வாக்யமாக அமைவதால் இந்த ஸ்தோத்ரம் வேதபாதஸ்தவம் என்று பெயர் பெற்றது.

**ஸ்ரீ மஹா கணபதி நவார்ண வேதபாதஸ்தவம்**
**தமிழ் உரையுடன் முற்றிற்று.**

---